உ.

சிவசண்முகன்றுணை.

# புள்ளிருக்குவேளூர்ப்புராணம்
என்னும்
# வயித்தீசுரன்கோயிற்புராணம்.

காத்தியாயனரிருப்பு
**வடுகநாததேசிகர்**
அருளிச்செய்தது.



இஃது,
திருக்கைலாசபரம்பரைப்
பொம்மையபாளையம்
ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதினத்துச்
சிதம்பரம்
**இராமலிங்கசுவாமிகளால்**
பரிசோதிக்கப்பட்டு,
ஷை சுவாமிகள்மாணாக்கர்களிலொருவரும்
சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியா சாலை
உபாத்தியாயருமாகிய
க - சொக்கலிங்கமுதலியாரால்

சென்னை:
ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

**1886.**

# சருக்கவகராதி.

# சருக்கவகராதி.





# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧௫௪ | ௮ | ௩ | கயி | சையி |
| ௧௫௫ | ௧௪ | ௨ | ஞருஞ் | ஞரிஞ் |
| ௧௫௭ | ௬ | ௨ | நோர் | ணோர் |
| ௧௫௮ | ௧௨ | ௩ | சிர | சர |
| ௧௫௯ | ௧௮ | ௪ | டுர் | டுயர் |
| ௧௬௨ | ௧௫ | ௪ | பெரு | பெறு |
| ௧௬௭ | ௬ | ௩ | வமா | வம்வா |
| ௧௬௯ | ௧௬ | ௨ | தென | தன |
| ௧௭௫ | ௨௫ | ௨ | ஓமிழ்ப் | ஓமிழ் |
| ௧௭௬ | ௩௦ | ௨ | விழாய் | விழா |
| ௧௮௦ | ௫ | ௩ | ளென்று | ளேறு |
| ,, | ௬ | ௩ | றவன் | றனன் |
| ௧௮௫ | ௩ | ௨ | கொதி | கொழி |
| ௧௯௦ | ௨௬ | ௪ | பன்றுன் | மன்றே |
| ௧௯௪ | ௪௨ | ௨ | டெரு | தரு |
| ௧௯௫ | ௧௩ | ௧ | நவர் | யவர் |
| ௧௯௭ | ௨௩ | ௪ | புகுவன் | புகான் |
| ,, | ௨௯ | ௩ | முறை | முமை |
| ௨௦௩ | ௧ | ௪ | வரற் | வரர்க் |
| ,, | ௪ | ௧ | நற் | னற் |
| ௨௦௪ | ௫ | ௪ | நிங்கு | நீங்கி |
| ௨௧௩ | ௧௧ | ௪ | தியலைப் | தியைப் |
| ௨௧௪ | ௧௮ | ௧ | குான் | குழந் |
| ௨௧௯ | ௧ | ௩ | பனை | பணை |
| ,, | ௨ | ௪ | னனை | னணை |
| ,, | ௩ | ௨ | டனைய | டணையண் |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# புள்ளிருக்கு வேளூர்ப் புராணம்

என்னும்

# வயித்தீசுரன்கோயிற் புராணம்.

## காப்பு.

திங்களுட னெழில்கொழிக்குங் கொன்றையந்தார் தரித்திலகு சிவனெங் கோமான், மங்களசின் மயமான வைத்யலிங்கம் விளங்கு தல மகிமை யோங்கப், பொங்குசிறப் பினைமதுரம் பொழிந்திடுசெந் தமிழினாற் புகல வாய்த்த, கங்கையணி மதஞ்சொரியுங் கற்பகக்குஞ் சரத்திருதாள் கருத்துள் வைப்பாம்.

## கடவுள்வணக்கம்.

### வைத்திய நாதர்.

திருமாலும் பதுமம்வள ரயன்முதலாங் கடவுளருந் திகழுமேன்மை, தருமாலி னிழலுறையுஞ் சனகாதி யரும்வேளூர் தன்னிற் போற்றக், கருமாவின் றொடர்பகற்றிப் பதவிபெற மருந்தளித்துக் கருணை செய்யும், வருமாலை யிளம்பிறைசேர் வைத்தியலிங்கம் பொன்னடியை வணக்கஞ் செய்வாம். (க)

## தையலுநாயகி.

பன்னரிய மகிமைநிறை யானந்தப் பெருகொளியே படிவ மாகி யுன்னருமங் களநிறைந்து விளங்கியிருந் தெழில்கொழிப்ப வுலகுக் கெல்லா, மன்னையா யைந்தொழிற்கும் வித்தாகிப் புவனங்க ளனைத்து முய்ய, மன்னுபெருங் கருணைபொழி தையலு நகிமலர்த்தாள் வணக்கஞ் செய்வாம். (உ)

கரும்புருவச் சிலையும்வரிக் கயல்விழியும் வள்ளைவார் காது முல்லை, யரும்புமிள நகையுஞ்செங் கனிவாயும் பிறைநுதலு மமுத வாக்கும், பொருந்தியமங் கலநாணு மலர்க்குழலும் விளங்கவெழிற் புள்ளூர் மேவுந், திருந்துமணங் கமழ்சாந்து கழுத்துமைவா லாம்பிகைதாள் சிரமேற் கொள்வாம். (௩)

## விநாயகக் கடவுள்.

ஏராரும் பிறைமருப்புஞ் சிந்துரச்சுந் தரமுகமு மிலகச் செம்பொன், வாராருங் களபமுலை மாதுமைதைய லுமையளித்த மைந்தனுகிக், காராரும் பொழில்புடைசூழ் புள்ளூரிற் கருணைமதஞ் சொரிந்தெந் நாளுந், தீராத கொடும்பாச வினைதீர்த்த பிள்ளைபதஞ் சிரமேற் கொள்வாம். (௪)

முத்திவிநா யகன்மகிழு மன்பனுக்கிவ் வுலகினிருண் முழுதுநீக்கு, மத்திவிநா யகனெனவே யகத்திருளை நீக்குவர மளித்து மன்னு, மெத்திவிநா யகன்மேலாஞ் சிவஞானச் செல்வனிவ னெனவே செய்யுஞ், சித்திவிநா யகன்வேளூர்க் குடவுறைவி நாயகன்றுள் சிரமேற் கொள்வாம். (௫)

## சுப்பிர மணியக் கடவுள்.

தாங்குபெரும் புவனமெலாம் பணியுமிரு திருவடித்தா மரையு நீங்காத், தேங்குபெருங் கருணைவழிந் தொழுகுதிரு முகங்களோ ராறுந் தெய்வத், தேங்கமழுங் கடம்பணியும் பன்னிரண்டு தடம்புயமுந் திகழ மன்னுங், * காங்கெயனைப் பரிதிபுரி வளர்குமர குருபரனைக் கருத்துள் வைப்பாம். (௬)

அளிதருசிந் தையரான வமரர்பெருஞ் சிறைமீள வகிலம் வாழப், பிளிறுமயி ராவதமும் பொன்னுலகும் விண்ணவர்கோன் பெறமே வண்ட, வெளிமுகடு மதிரவெதிர் வருசூர னுளங்கலங்க விளங்கு செங்கை, யொளிதிகழ்வே லெடுத்தமுத்துக் குமரநா யகன்மலர்த்தா ளுளத்துள் வைப்பாம். (௭)

## திருநந்தி தேவர்.

பொடியணியு மேனியுமுப் புரிநூல்சூழ் மணிமார்பும் புனையு மின்னற், கொடிதிகழுஞ் செஞ்சடையும் விழிமூன்றுங் கரநான்குங் குலவு மானும், வடிமழுவுஞ் சுடர்வாளு மணிப்பிரம்பும் விளங்கவெள்ளி வரைகாத் தையன், முடிவரிய திருவாய்மை செலுத்துநந்தி நாயகன்றாள் முடிமேற் கொள்வாம். (௮)

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

பூழியன்வெஞ் சுரநீங்கக் கூனிமிரச் சமணொழியப் புனித வெண்ணீ, றேழுலகுந் தொழுதேத்த வெடுத்தளித்துச் சிவசமய மிலகச் செய்தே, யூழிகடற் கொண்டிடினு மூரினுள்வந் தனுகாதென் றுரைக்குஞ் செல்வக், காழிநகர் விளங்கவளர் கவுணியர்தங் குலமணியைக் கருத்துள் வைப்பாம். (௯)

* காங்கெயன் என்பது குறுக்கல் விகாரம்.

## திருநாவுக் கரசு நாயனார்.

அருகரமைத் திடுநீற்றி னறைமுதலாந் தீங்கடியார்க் கணுகா தென்னும், பெருமையெடுத் துலகறியக் காட்டிமக ரஞ்சுழலும் பெருநீர் மல்கும், கருநிறத்தென் டிரைக்கடலிற் கன்மிதப்ப வருநாவுக் கரசின் செம்பொற், றிருவடித்தா மரைமலரைப் பவக்கடலின் கரையேறச் சிந்தை செய்வாம். (௧௦)

## சுந்தர மூர்த்தி நாயனார்.

அரவையார் மணியல்குற் றடமிலக வளருமிள வன்னம் போலும், பரவையார் திருமனைக்கெம் பெருமான்ற னிரண்டுதிருப் பாதநோவ, விரவையா ரடியாமத் தேவலா ளாய்த்தூதுக் கேவு நல்லொப், புரவையார் தோழனெனுஞ் சுந்தரன்பொன் னடிபணிந்து போற்று வோமே. (௧௧)

## மாணிக்க வாசக சுவாமிகள்.

வழுதிமனு நெறிசெலுத்து மந்திரியாய்ப் புரவிகொள்ள வந்த செம்பொன், முழுதும்வளர் திருப்பணிசெய் திலகுதிரு வாசகமுமொழிந்து பாரோர், தொழுதுசிர மேற்கொண்டு துதிப்பதிறை கோவையார்த் துறைகள் யாவும், பழுதுபடா தெடுத்துரைத்த வாதவூரன்பர்பதம் பணிதல் செய்வாம். (௧௨)

## சண்டேசுர நாயனார்.

மண்டுபுனல் பரந்துவரு மண்ணிநதி வெண்மணலின் மாறுக் காதல், கொண்டிறைவன் முடிமீது குடத்துநிறை பால்சொரிந்து கோலாலங்கு, மிண்டுசெயுந் தாதைதா டடிந்துமே தினியின்மிகு மேன்மைபெற்ற, சண்டியிரு தாள்வணங்கிச் சிவனடியார் மலர்ப்பாதந் தலைமேற் கொள்வாம். (௧௩)

## திருத்தொண்டர்.

வெள்ளெருக்கின் வனப்பாங்கர் விளரியளி யினமுரல விண்ண ளாவிக், கள்ளிருக்கு மலர்ச்சோலை கவினவகுத் தெண்ணரிய கற்ப காலந், தெள்ளிருக்கு முதனான்கு வேதநித மருச்சனைசெய் திருச்கு மேலாம், புள்ளிருக்கு வேளூரை நினைக்குமன்பர் தாள் பணிந்து போற்று வாமே. (கச)

## வாழ்த்து. வேறு.

வான்வளஞ் சுரந்து பெய்க மன்னவன் செங்கோல் வாழ்க
நான்மறை யவர்கள் வேள்வி நன்னெறி வழாது செய்க
நூன்முறை யுணர்ந்த கல்வி நுண்ணறி வுடையோர் சூழ்க
மேன்மையாஞ் சைவ மோங்கி விளங்குக வுலக மெல்லாம். (கரு)

## பயன். வேறு.

திருவிளங் கியமா நிலந்தனிற் புகழ்சேர் செழித்திடு வயித்திய நாத, னருமையாந் தலநன் மகிமையைக் கேட்போ ரளப்பருஞ் செல்வரா குவர்மேல், லுருபெரும் பகையை வெல்குவர் கல்வி மகப்பெறு குவர்பிணி யெய்தார், நிருமல ஞான சிவன்மலர்ப் பாத நிலைமை பெற்றினிதுவாழ்ந் திருப்பார். (கசு)

## அவை யடக்கம். வேறு.

எண்ணி ரண்டு கலைகளு மெய்திய
தண்ம திக்குமுன் முரகை தானொளிர்
வண்மை யாமலை யோர்முன் வகுத்தியற்
பண்ண மைத்தெழு மென்றமிழ்ப் பாடலே. (கஎ)

வளங்கொண் மால்விடை யண்ணன் மகிமைதான்
விளங்கு மாதலின் மேவுமென் சொற்குறுங்
களங்க மெண்ணிலர் கைக்கொள்வ ரென்றென
துளங்கொ ளாசை துரப்ப வுரைசெய்வேன். (கஅ)

கடவுள் வணக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கஅ.

## பாயிரம்.

நதிபொதியுங் கயிலைவரை நாதனந்தி நாயகற்கு நவில வன்னோன், சதுமறையு முணர்ந்திலகு சனற்குமாரற்குநவ வவன் றலைமை சான்ற, மதிகொள்வியா தனுக்களிக்க வவன்சூத முனிக்கருள மகிழ்ந்து சூதன், பதவிபெற வகுத்துரைக்கும் பதினெட்டுப் புராணவகை பகருங் காலே. (க)

வேறு.

தருபிரமம் பதுமம்விண்டு சைவம்பா கவதந் தயங்குபவி டிய மகிமை தருமார்க்கண் டேயங், கருதருநா ரதமாக்கி னேயமே பிரம கைவர்த்த மிலிங்கஞ்சீர் வராகமே காந்தம், வருபெருவா மனங் கூர்ம மச்சங்கா ருடமே மன்னுபிர மாண்டமிவை வளர்பதினெண் புராணந், தெரிகிரந்தத் தொகைபகரிற் சிவகதைமூன் றிலக்கந் திகழ்நெடுமா லயன்பரிதி செங்கனற்கோ ரிலக்கம். (உ)

வேறு.

குவியிளந் திங்கட் கொழுந்தணி முக்கட் குரிசில்வண் புகழ் நிறை புராணங், கவினுறு சைவம் பவிடியம் வளர்மார்க் கண்டேய

யிலிங்கமே காந்தம், புவிபுகழ் வராகம் வாமன மச்சம் புகலரு மகிமைசேர் கூர்மஞ், செவிநுக ரமுத மாமென விளங்கித் திகழ்பிரமாண்டமீ ரைந்தே. (௩)

வேறு.

கரியமால் புராணம் விண்டு காருட நார தஞ்சொல்
லரியபா கவத மோர்நான் காகும்வா ழயன்பு ராணம்
பிரமமே பதும மாகும் பிரமகை வர்த்தம் வெய்யோற்
குரியதா மாக்கி னேய மொளிர்கனற் புராண மாமே. (௪)

வேறு.

எழில்பெருகு சிவகதையிற் காந்தநிறை கிரந்தமோ ரிலக்க மாகுந், தழுவியசங் கிதையாறு வளர்காண்ட மோரைம்ப தாகு மிப்பாற், கெழுமியசங் கிதையாறும் பகர்ந்திடின்முற் சனற்குமாரங் கிளருஞ் சூதம், விழுமியசீர்ச் சங்கரமேல் விண்டுபிர மஞ்சூர மென்பதாமே. (௫)

எண்ணியிடு புராணமீ ரொன்பதனிற் புள்ளிருக்கு வேளூ ரொன்னும், புண்ணியநற் றலமகிமை பவிடியமேற் பிரமாண்ட புராணங் காந்தம், வண்மைபெறு சைவபுரா ணத்தின்வகுத் தெடுத்துமுனி வரர்கள் கேட்ப, வுண்மைபெற முழுதுணர்ந்த சூதமா முனிவன்மகிழ்ந் துரைத்தல் செய்தான். (௬)

திருந்துபுகழ் மிகுகடவுள் வணக்கமுடன் பாரயிஞ்சீர் செல்வ மோங்கிப், பொருந்தியிடு திருநாட்டுச் சிறப்புநவ மணிகொழிக்கும் பொற்பு வாய்ந்தே, யிருந்திரு நகர்ச்சிறப்பு நைமிசா ரணியவெழிற் சருக்க மென்றுந், தருந்தகுதி மகிமைவளர் தல்ச்சருக்க மேற்றீர்த்தச் சருக்க மாமே. (எ)

கருதுமிரு டியர்முறைமை கங்கைபா லந்தீர்ந்த சருக்க மாத, வருபலன்கூ றியசருக்கந் தருப்பணஞ்செய் பலச்சருக்கம் வந்து தக்க, னருள்பெறுமான் மியமதன்மே லிரணியவன் மச்சருக்க மரிய தான, தருமவிறை தவம்புரியுஞ் சதானந்தச் சருக்கமினிப் புருடன் றன்னை. (அ)

கொலைபுரியும் பவந்தீர்ந்த சருக்கமுடன் பாரிதனைக் கொன்ற பாவந், தொலையுநெறி பகர்சருக்கஞ் சத்தியசன் மச்சருக்கஞ் சுருதி யாய்ந்த, நிலைமைமுனி வரர்தீர்த்தச் சருக்கம்வரு வீரகதத் நீங்கும வண்மை, மலரினுறைந் திடுபிரம தீர்த்தஞ்சூ ரியதீர்த்தச் சருக்கமன்றும். (கூ)

தக்கனியற் றியதீர்த்தச் சருக்கம்வித்தி யாதரதீர்த் தச்சருக்க மிக்கசுத ரிசனன்சா பந்தரிசு விடுசருக்கம் வில்வ தீர்த்தந் தொக்ககவு தமன்கபிலன் சோமனொடு பராசரன்சூழ் புகழி ராம னக்கிரம மகற்றுதசி லன்சருக்க மாதிகா வேரி யாமால். (கo)

கந்தருவ ருறுசாபந் தவிர்சருக்க மிருதசஞ்சீ வனங்க ளிந்த சிந்தையுள சஞர்த்தனன்றன் சருக்கம்வளர் சூலதீர்த் தத்தின் மேன்மை, வந்திடுநற் சேடதீர்த் தச்சருக்க மெண்டிசையின் மகிமை வாய்ந்த, விக்கிரன்சா பந்தவிர்த்த சருக்கமேற் றருவாசச் சருக்க மெய்துறும். (கக

அருமைபெறு மங்கசந்தா னச்சருக்கஞ் சிவதன்மச் சருக்க மட்பால், வருதிருச்சாந் தண்டைசெயு முறைமைவகுத் திடுசருக்கம் வள்ளி நாதன், திருவவதா ரச்சருக்கம் வரம்பெறுநற் சருக்கஞ்சே வேறு நாதன், றருமதல மகிமைகாட் டியசருக்கம் போர்புரியுஞ் சருக்க மாமால். (கஉ

தாரகா சுரன்றன்வதைச் சருக்கமச ரீரிவாக் களித்த தன்மை
யாருமெழிற சருக்கமுயர் தேவரருச் சனைசெய்யுஞ் சருக்க மன்பாற்
சிருறுவா லாம்பிகைவந் தருச்சனைசெய் சருக்கமேற் றிருவிழாச்செய்
பேருவகைச் சருக்கமப்பாற் குமாரநா யகன்பூசைச் சருக்கம் பின்னர்.

அருள்பெறுமா நித்தனுல் வேதமங்கா ரகன்சருக்கஞ் சந்தி ரன்
சேர்த, தெருளுமெழிற் சடாயுமகி ழருச்சனைகா லவச்சருக்கஞ் சித்தி
ரகேது, வெருளகலும் வீரசே னச்சருக்கம் புகழ்சில விருத்தன் மே
ன்மை, சுருளளக மிலகுசுவா சினிச்சருக்கந் தூச்சிலைச் சருக்கந்
துன்னும் (௧௪)

உண்மைபெறு முதங்கனெழிற் சருக்கமுடன் றொகையறுபத
தொன்றும் வாய்ந்த, வெண்மதியு நதியுமணி வேணிவயித் தியநா
தன் புராண மேவும், வண்மைபெறு மான்மியமிவ் வரன்முறைமை
வழாதுபுவி யதனின் வாழ்வோர், கண்மணியாஞ் சூதமுனி வரனு
ரைத்த படிகருதநி லமையச் சொல்வேன். (௧௫)

வல்லியந்தா மரைபயிலுங் குறிஞ்சியண்ணல் பூசைசெய்மா நக
ர மாகும், பல்லியந்தா மரையிருளின் கண்ணுமுறங் காதிரும் பசுந்
தேன் பில்கு, மல்லியந்தா மரைப்பழனப் புள்ளூரின் மான்மியப்பா
யிரமா ராய்ந்து, சொல்லியந்தா மரைச்சேரா நல்லினஞ்சேர் திரு
நாட்டுச் சிறப்புச் சொல்வேன். (௧௬)

பாயிர முற்றிற்று.

ஆ திருவிருத்தம் – ௧௫.

---

## திருநாட்டுச்சிறப்பு.

எல்லை காணரு மிலறவனை யிமயமீன் றெடுத்த
வல்லி யங்குழ லுமைமகிழ் தலந்தொறு மன்பாற்
புல்லி டும்புது மலரினாற் பூசைதான் புரிய
நல்ல மாதவஞ் செய்தது சோழநன் னாடு. (க)

கலைவ லார்ந்திடு மதிக்குமோர் களங்கவந் திருந்து
முலைய நாடினு மவருளத் தொருகளப் பின்றித்
தலைமை பெற்றநல் லொழுக்கமுந் தக்கபே ரறிவு
நிலைமை பெற்றவர் நிறைவது சோழனீர் நாடு. (உ)

இன்மைபெற்றிரப் பவர்க்கெலா மிருநிதி யளித்துத்
தொன்மை பெற்றநீள் புகழையே பொருளெனத் தொருக்குந்
தன்மை பெற்றபல் பெருங்குடி தழைக்குமென் றுரைக்கு
நன்மை பெற்றது நாட்டினிற் சோழநன் னாடு. (ங)

கற்பு மேவிய மனைவியைக் கலந்துறு காதற்
பொற்பி னின்வழா இல்லறம் புரிந்துதான் புகன்ற
சொற்றி றம்பிடா தரிந்துடற் றசைதுலை நிறைக்கப்
பெற்ற மேன்மையும் படைத்தது பெருகுநீர் நாடு. (ச)

வேறு.

மறுபு லப்பகை வேந்தர்கள் வந்துதாள் வணங்கிட மனுநீ
பெறந டத்துசெங் கோன்முறை பிறழ்ந்திடாப் பெற்றியி னரசா
ட்சி, முறைசெ லுத்தலாற் றிங்கண்மும் மாரிமூ துலகினிற் பொழிந்
தோங்கக், குறைவில் பல்வளங் கொழித்துநா டுயர்புகழ் கொண்டெ
ழின் மிகுமாதோ. (ரு)

வேறு.

குவிம ணிக்கொழித் தருவிசூழ்ந் திடுமுயர் குறிஞ்சி
கவிய மாத்திரள் சார்ந்திடுங் கலுழிசேர் முல்லை
* விவித மீன்குலை மேவிடுங் கழிமிகு நெய்தல்
புவிதொ ழும்புதுப் புனல்பரந் திடும்புகழ் மருதம். (௬)

நீடு காதல்சூழ் புணர்ச்சியி னெறிமிகுங் குறிஞ்சி
வாடி யேபிரிந் திருப்பது மல்கிடு முல்லை
யாட வர்த்தமை நினைந்திரங் கிடுமடர் நெய்த
லூடல் செய்குத னிகழ்ந்திடு மொளிர்புனன் மருதம். (௭)

பசுந்தி னைக்கிளி கடிகுவர் கொடிச்சியர் பதலை
யுகந்த வெண்டயி ராய்ச்சியர் கடைகுவ ரொளிர்நீ
ரிசைந்த நித்திலம் பரத்தியர் குவியல்செய் திடுவா
ரசைந்து நெற்பொலி கடைச்சிய ராற்றுவர் கொழிப்பார். (௮)

மேவி நல்வெறி யாடுதன் மிகுந்திடுங் குறிஞ்சி
பாவு டாளிதம் பிரப்புமல் கிடும்பணி முல்லை
யாவ லிற்சுறு முள்ளணங் கயர்வன நெய்த
றேவ வள்ளைபா டுதனிறைந் திடுஞ்செழு மருதம். (௯)

கார கிற்செழுங் குங்குமந் தடிந்துமேற் கமழு
மாரம் வேரகழ்ந் தெடுத்தெறிந் தவிரொளி மணிநற்
போர்கு வித்துழு திடுந்திறற் கானவர் புதிய
வார்தி னைவிதைத் திடுவன மிகுமலைச் சாரல். (௧௦)

ஒன்று கம்பலக் கோடுமேடிப் போர்வைய ரூதுங்
கொன்றை வேய்ங்குழ லாயர்தம் பாடியிற் குழைந்து

---

* விவிதம்-பலவகை.

துன்று காதல்கூர் தாய்வருஞ் சுரநெறி பார்த்து
முன்றி லான்குழக் கன்றுநின் றிரங்கிடு முல்லை. (கக)

வெண்ம ணற்பரந் திளநிலா வெறிப்பமே வியநீள்
வண்ண வார்கட லிருள்பரந் தெனவதி தரமே
னண்ணு பைந்தளிர்த் துவர்ப்பின்ன னெடுங்கொடி நாப்பட்
கண்வ லைப்பெருங் குவியல்சூழ்ந் திடுங்கழிக் கானல். (கஉ)

பிள்ளை வண்டுசூழ்ந் தெழுந்துபாண் மிழற்றிடப் பெருகுங்
கள்ள விழ்ந்தசெந் தாமரைக் கிடங்கினுக் கயல்சூழ்
பள்ள வோடையின் மறிபடா தகன்றுநீள் பசிய
வள்ளை தின்றுகார் மேதிகண் ணுறங்குநீண் மருதம். (கங)

மிசைவி ளங்கிய குறிஞ்சியு முல்லையும் விரவிப்
பசிய மெல்லிலைக் காந்தளங் கொடிபடர்ந் திடநின்
றசையு நீனிற மலர்கொள்கா யாவின்மே லமர்ந்தே
யிசையு நல்லெழின் மயில்சிற கினைவிரித் திருக்கும். (கச

குருகி றக்கட னெய்தலு மருதமுங் கலந்து
விரவு வெண்மடற் கைதையின் றூதுமேற் றிமிர்ந்தே
மருவு தாமரை மலரினல் விளரிவண் டினங்க
ளுருகு மன்பர்போற் செவ்வழி பாடியே யுறையும். (கரு

புணர்கு றிஞ்சிநன் முல்லைபொற் புறநெய்தன் மருத
திணைம யக்குறு நிலங்களுஞ் செறியுகா னிலத்தி
லிணையு நண்பகற் பொழுதுசேர் பாலையு மடுத்தே
யிணையில் காளிகோட் டங்களுஞ் சிற்சில விருக்கும். (கசு

ஆறலைத்திடும் வேடரு மலைக்குற வருமா
ணேறு மேய்த்திடும் பொதுவரும் பரதரு மிளரு
ழேறு செய்திடு முழவருஞ் செறியுமந் நிலத்தில்
வேறு வேறுதா மிகுதியாய் விளங்குவ ரம்மா. (௧௭)

மல்கும் வெண்முகி னீணிறக் கடலினை மடுத்துப்
பல்கி டும்பசும் பொன்னென மின்னிமேற் பசந்து
நல்வ ளங்கொழித் திருந்திடு சையநல் வரைமேற்
புல்கும் வெள்ளிவீ ழெனமிகப் பொழிந்தது மாதோ. (௧௮)

வளங்கொண் மாமணி யலைநெடுங் கரத்தினால் வாரித்
துளங்கி வீழும்வெள் ளருவிமேற் பரந்துசூழ்ந் தோடிப்
பிளந்து சாரல்சேர் குறிஞ்சியைப் பெருமலைக் குறவர்
தளர்ந்தி ரைந்திட முல்லையிற் சார்ந்தது நகவே. (௧௯)

குங்கு மத்தடஞ் சினைமுறித் தெழுந்துகோ ழரைநற்
றுங்க வாரம்வேர் கிழிந்திடப் பிடுங்கியே சுழித்துத்
தங்கு காரகிற் குறடெறிந் தாசினி தகர்த்துப்
பொங்கி வெண்டிரை கொழித்துமேற் போந்தது மருதம். (௨௦)

இடைசெ றிந்திடு பாலையி னீணிலத் தெய்தும்
வடவை வெந்தழ லாமெனப் பரன்மடுத் திருந்த
விடர்பு குந்துபா தலமுத லாழ்ந்துமே லெழுந்து
புடைப ரந்துசூழ்ந் தாயிடை வெம்மையும் போக்கி, (௨௧)

வேக மோடெழும் பொன்னியின் வெள்ளிநீர் பரந்து
நாக ஞாழல்சூழ் கழிக்கரை மருதனன் னிலம
தாக வேயுவர் முழுவது மகற்றியாழ் கடலின்
சேகு சேர்புலா னுற்றமுங் கடியமே வியதே. (௨௨)

ஒழுகு தீம்புனற் பொன்னிமா நதிசுழிந் தோடி
முழுதும் வெண்சுதை தீற்றிய மதகினுண் மோதிக்
கழனி மேவுகால் வாயிரு கரைதொறும் வழிந்து
செழிய வல்லிசை யம்பினும் விரைந்துசென் றதுவே. (உ௩

அங்கண் மாநிலத் தமுதெனப் பரந்திடும் பொன்னிப்
பொங்கு நீள்புதுப் புனல்செழுந் தாமரைப் பொய்கை
தங்க வார்கரைக் குளம்பல நிரம்பிடச் சூழ்ந்தே
செங்கை யற்பழ னந்தொறுஞ் செழித்திட நிறையும். (உ௪

துள்ளி வாளைசெங் கயல்பிறழ்ந் திடச்சுழித் தோடிப்
பள்ள நீண்மடை யுடைந்திடப் பரந்திடும் பொன்னி
வெள்ள நீர்ச்சிறை செய்குவர் விரைந்தெழுந் தனேக
மள்ளர் மைம்முகிற் குழாமெனப் பரவினர் மகிழ்ந்தே. (உ௫

உழுவ ரெங்கணும் பரந்துநின் றுழுதிடு கருஞ்சேற்
றிழுதின் வான்முளை வித்துவ ரிந்திர தெய்வந்
தொழுது நாற்றினை யெடுத்துநீள் கோட்டகந் தோறுங்
கழனி வாழ்கெனக் களிப்பொடு கடைச்சியர் நடுவார். (உ௬

கள்ள நீள்விழிக் கடைச்சியர் களிமது வார்க்க
மள்ளர் தாமகிழ்ந் துண்ணுமவ் வழிமதுப் பெருகும்
புள்ள லம்புதண் பணைதொறும் புதுமது நுகர்ந்தே
துள்ளி வாளைக ளேயசெங் கமலமே லுறங்கும். (உ௭

உறுப தம்மறிந் துழவர்கள் காட்டவொளி புருவ
நறுநு தற்கடைச் சியர்கணீள் கழனியி னளின
மிறையுந் தத்திரு முகத்தினை பெறுதெனப் பிதுங்கி
வெறிவ ராம்பல்வா யினைபெறு தெனமிதித் திடுவார். (உ௮

தழைந்து நென்முதற் பசேலெனச் செறிந்தசெஞ் சாலி
யெழுந்து வெள்ளறி வினரெனச் சூன்முதிர்ந் திலகு
செழுங்க திர்த்தலை நிமிர்ந்துமேன் முதிர்ச்சிசெய் திறைஞ்சிக்
கொழும்ப யன்மிகு மன்பர்போற் குலவிய தன்றே. (௨௧)

பரவி நின்றுசெஞ் சாலியைத் தடிவர்பற் பலநல்
வரையெ னப்பல போர்கள்கட் டிடுவர்வண் பகடு
நிரைநி ரைமிகப் பூட்டிநெற் சூடடித் திடுவ
ரரசு கொள்கட னளித்துமேன் மிகுதிகொண் டம்மா. (௩௦)

எண்ண ரும்பல தானங்க டருமங்க ளியற்றி
வண்மை சேர்மலை யெனமிகக் குவிந்தநெல் வாரி
நண்ணு பண்டியி லேற்றுவர் நன்னெறி யொழுக்க
முண்மை யோங்குநீ டூர்தொறு மூர்தொறு முவந்தே. (௩௧)

வேறு.

அம்பியனல் விழிமாத ரணிகலவை கமழ்பொன்னித் துறைவ
னை, செம்பியன்செங் கோன்முறைமை செலுத்துதிரு நாட்டிலகு
சிறப்புச் சொன்னேன், பம்பியன்மா வலிமெலிய வெயிலுமிழ்பன்
மணிமாடம் பலசூழ்ந் தென்று, * நம்பியகல் லெழில்கொழிக்கு நல
ங்கொடிரு நகர்ச்சிறப்பு நவில்வன் மாதோ. (௩௨)

திருநாட்டுச் சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௭.

---

* நம்பு-விருப்பம்.

## திருநகரச்சிறப்பு.

இன்ன வண்புகழ் நாட்டினி லிலகிய மகிமை
மன்னு புண்ணிய வளநகர் வயித்திய நாதந்
தன்னை நேரரு மாடமா ளிகைபல தழைத்துப்
பொன்னி லங்குவா னுலகினும் பொற்புற மன்றே. (க)

தயங்கு சந்திர காந்தநன் மேடைபொற் றசும்பு
நயக்க னிந்தெழில் கொழிக்கும்வே திகைநவ மணிகள்
வயங்கு சித்திரத் தூணெடு மண்டப மன்னி
யியங்கு நீணிலைச் சாரள மெங்கணு மிலகும். (உ)

அன்ன சத்திர நான்மறை வேதிய ரகரம்
பன்ன ருஞ்சிவா கமம்பயின் றிடுமடம் பலவே
றுன்னு நால்வகை யாச்சிர மம்பயி லுறையுண்
மன்னு வீதியி னிருபுற நெருங்கியே மல்கும். (௩)

மந்தி ரத்துறை வழாதுவே தியர்மனை தோறுஞ்
சிந்தை கூர்தரும் வேள்விசெய் செழும்புகை கமழும
பிந்து மூவர்தம் மனைதொறும் பிறங்குநற் சடங்கு
தந்த மக்கியல் பாம்னிதி முறைதழைந் திடுமே. (௪)

பொன்னும் வெள்ளியு நவமணிக் குவியலும் பொருந்து
மக்க லாரணி கலன்களும் வெயில்கொழித் தம்மா
துன்னு தூங்கிருள் கிழித்திடுஞ் சுதைசெய்நன் மாட
மன்னு நீடெழின் மனைதொறு மனைதொறு மாதோ. (௫)

வேறு.

திரைதவழ் தலிறற் கொடிப்பவ ளங்கள் செழித்தினி திருத்த
லால் வெண்முத், திரையும்வெண் சங்க மிகுர்திடு மதனு லிலக்குமி

வாசநண் ணுதலா, லுரைசெய்தெண் ணரிய கலன்பரப் பிடுஞ்சீ
ரொளிர்தலா லோங்குமாக் கடல்போல், விரைகமழ் நெடிய வா
வண வீதி விளங்கியே தழைந்திடு மாதோ. (௬)

வேறு.

அளகை மாநகர் வளமெலா மாவண வீதி
யுளதெ ருத்தனி லொன்றினுக் கிணைபெறு தொளிசேர்
நளின மங்கையு நற்கலை மடந்தையு நகர்வா
ழிளகு மன்பினர் மனைதொறு மினிதுவீற் றிருப்பார். (௭)

மகர தோரணம் வான்முக டுரிஞ்சியே மல்கு
நிகரில் வீதியி னெகிழ்செழுஞ் சந்தனக் கலவைப்
பகர ரும்பனி நீர்பரந் தெழுந்துகள் படியத்
தகர வார்குழற் றையலார் தாந்தெளித் திடுவார். (௮)

கற்பி னின்வழாக் கணங்குழை மாதர்கள் கவின்சூழ்
சிற்ப நூன்முறை மணிகளைப் பரப்பிவே திகைமே
லற்ப சம்பொனும் வெள்ளியு நகுசுட ரெறிக்கும்
பொற்ப மைந்திடு பூரண கும்பம்வைத் திடுவார். (௯)

புனையும் பொன்மதி லெடுத்தபுள் ளிருக்குவே ளூரின்
மனையி டந்தொறு மங்கல மணவணி மன்றுஞ்
சினவி டைப்பிரான் சிவகண மாவரந் நகரி
னனைவ ரும்முதித் திடுங்கிரு மியுஞ்சிவ கணமாம். (௧௦)

செருந்தி சண்பகம் பாடலங் கூவிளந் தேமாக்
குருந்து தாதகி வகுளமந் தாரநற் கோங்கம்
விரிந்து மஞ்சரி திகழ்தரு தாடிமம் வெள்ளி
யரும்பு பொன்மலர்ப் புன்னைநந் தனவன மனேகம். (௧௧)

முட்பு றக்கனி வருக்கையின் முதிர்சுளை கனிந்து
விட்பு லத்தினின் றொழுகுசெந் தேனுமென் முகைகள்
பெட்ப வொண்முறுக் கவிழ்ந்திடப் பெருகுசெந் தேனுங்
கட்பு லன்மகிழ் தரமலர்ச் சோலையிற் கவினும். (கஉ)

கறைவி ளங்கிய கந்தரக் கடவுள்வாழ் வேளூர்
நிறைவ ளஞ்சொல நெட்டிதழ்த் தாமரை மலர்மே
லுறையு நான்முக னொளிருமா மணிமுடி யனந்த
னறையி னெண்ணரும் பிறப்பினை வேண்டிவ ரம்மா. (கங)

இன்ன தொன்னகர் வளமுழு வதுமினி தெடுத்தே
யுன்னி யோதுதற் கரியதா லுலகெலாந் துதிக்கு
மன்ன மான்மிய மறிந்தவா றுரைத்தன னளந்து
பன்ன ருந்தவர் நைமிசா ரணியமேற் பகர்வேன். (கச)

திருநகரச்சிறப்புமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-அக.

---

## நைமிசாரணியச்சருக்கம்.

திருக்கிள ரிதழ்முறுக் கவிழ்ந்து தேன்றுளித்
துருக்கிய பசும்பொனி னொளித ழைந்திடு
மருக்கமழ் தாமரை மலரின் மேலினி
திருக்குநான் முகனெழிற் காஞ்சி யெய்தினான். (க)

எய்திய விரணிய கருப்ப னேர்மிகு
செய்திகழ் கருங்குழ னிமலி பாகனைப்
பெய்திடு மதுமலர்ப் பெரித ருச்சனை
செய்திருந் தனனுளந் தெளிவு கூரவே. (உ)

வேறு.

பனிமலர்ப் பொழில்சூழ் காஞ்சிப் பதியில்வெண் பதும மேவுங்
கனியிதழ் முத்த மூரற் கலைமக ளுடனி ருந்து
புனிதனைப் பூசை செய்யும் போதனை வேத வாய்மை
முனிவர்கள் மகிழ்ச்சி கூர முன்னர்நல் வினையாற் கண்டார். (ங)

வேறு.

குலகிரி யெனக்குண முயர்ந்து குற்றநீத்
திலகிய வில்லறம் புரிந்தி ருந்துதொல்
லுலகிய லாய்ந்துநல் லொழுக்க முற்றிய
வலகின்மா தவரய னடிவ ணங்கினர். (சு)

வேறு.

முகங்குளி ரினிமை கூறி முகிழ்த்தகைத் தலத்த ராய்நின்
றகங்குழைந் தைய கேணின் னடியமில் வாழ்க்கை யாற்றி
யிகந்தனி னகர மெங்கு மிருந்தனந் தவமி யற்றி
மகம்புரிந் தினியா முய்யும் வனமதொன் றருள்செய் யென்றார். (ரு)

விருப்பமும் பரவு வாய்மை விளக்கமு முருகிக் கண்டு
மருப்பயில் கமலத் தண்ணல் வளர்ந்துகூர் நுனிய தான
தருப்பையொன் றெடுத்த னேக தவஞ்செய்நல் வழிதான் காட்டு
முருப்பொலி நேமி யாக்கி யொய்யென வுருட்டி விட்டான். (சு)

வென்றிசேர் மறைக ளொன்கும் விரித்துரை செய்யும் வேதாந்
துன்றிய முனிவர் தம்மைச் சுபந்தரு மமுத வாக்கா
லின்றிது விரைவி னெய்தி யிருநிலங் கிழிய வோடி
நின்றிடு வனத்தி னீவிர் நிலைபெற விருத்தி ரென்றான். (எ)

குணதிசை தனிலெ ழுந்து குடதிசைச் சாரும் வெய்யோன்
வணமலி விம்பம் போன்று வளைந்தெழில் கொழிக்கு நேமி
கணமதி லனேகங் காதங் கடுகியோ டியது கண்டே
யுணர்வுகூர் விடைகொண் டன்னோ ருளமகிழ்ந் ததன்பின் சென்றார்.

சாருமா தவர்பின் செல்லத் தண்மதி தபன னாதி
யாருமூ வுலகி லுள்ள வனைவரும் வலஞ்செய் தோங்கு
மேருமால் வரையின் றென்பான் மிக்கநல் வளங்கள் வாய்ந்து
சேருமா ரணியந் தன்னிற் செழிப்புற நின்ற தன்றே. (௯)

நிலங்கொள்சீர் நேமி யோடி நின்றகா ரணத்தால் வாய்மை
யிலங்குமா தவர்முன் னுள்ள விடுகுறிப் பெயரை மாற்றி
நலங்கிளர் வனத்தி னைம் நைமிசா ரணிய மென்றே
வலங்கொள்கா ரணப்பேர் கூறி மகிழ்ச்சிபூத் திருந்தார் மாதோ. (௧0)

வேறு.

வள்ளி தழ்ச்செழும் புன்னையின் செருந்தியின் மலரு
மெள்ளி டற்கிட மின்றிவீழ்ந் திருந்திடுங் காட்சி
யள்ளி யப்பொழின் மாதருந் தவர்வரு மகிழ்வால்
வெள்ளி நற்பசும் பொன்மல ரிறைத்தென விளங்கும். (௧௧)

புனைத ருக்களின் கோடுவண் புவியிசை வளைந்து
துனைவின் மேலெழுந் தெழுந்துதாழ்ந் திடும்பொழிற் றோற்ற
நனைம லர்வன மாதுநன் பொடிதனித் தனியே
யனைய மாதவ ரடிபணிந் தெழுவது போலும். (௧௨)

திருந்த லிக்குரன் முரல்வனத் தினிற்செழுஞ் சுனைகள்
பொருந்த வெண்ணிறம் பொற்புறப் புணர்ந்திருந் திடனற்
பெருந்த வத்தினர் வழிநடைப் பேரினைப் பாற்றி
யருந்த வைத்திடு மின்சுவை யமுதென லாமால். (௧௩)

வழங்கு மாதவர் தமையுயர் வருக்கைமா வாழைப்
பழங்கு ளிர்ந்தசெந் தேன்படர் பசுங்கொடி வள்ளிக்
கிழங்கு காயுள தருக்குமி னனக்கிளர்ந் தெழுந்து
முழங்கு பாட்டளி முரல்வகூப் பிடுமுறை யாமால். (கச)

புள்ளெ ழுச்சிற கடித்துதிர் பூங்கனி யுடைந்த
கள்ளெ திர்த்துநீள் கால்கரைத் தோடிமக் கானின்
முள்ளெ யிற்றரா முடிகொள்சூட் டணிமயின் முறைகொண்
டுள்ளெ ழுச்சியோ டுறவுசெய் மகிழ்ச்சியுண் டாமால். (கரு)

தேனி னம்முரன் றுடுமவ் வனந்தனிற் சிறுகன்
றுனி னம்புலி சேர்ந்தொரு சுனையினீ ரருந்தும்
வானி டிக்குரன் மதகரி வாலுளை மடங்க
லூனி னைந்துவந் தோரிடந் தன்னினின் றிடுமே. (கசு)

அசும்பி கழ்ந்துசூழ் பொழிலினிற் கோங்கரும் பவிழ்தேன்
றசும்பி னின்வழி மதுவெனப் பெருகிடுந் தழைந்த
* பசும்பி டிக்கயல் வளர்ந்திடு பாளைவாய்க் கமுகு
விசும்பி னைக்கடி தளவிட வெழுந்தென விளங்கும். (கஎ)

குளவி கண்மது மலரையின் றிடுங்கொடு வரிப்பேர்
வளர்த ருப்பொலிக் குருளையை மகிழ்ந்துபூந் தளிக்கு
மிளகி ணர்க்குஞ்செவ் வெழின்மிகு பாவையை யீனு
மளவில் பொற்பினுக் ககமதா நைமிசா ரணியம். (கஅ)

வளமை நல்குநல் வரநல்கு நரைதிரை வாரா
இளமை நல்குமெண் சித்தியு நல்குமெண் ணரிதா
யுளபி றப்பினை யொழித்திட வுபாயமு நல்கு
மளவி லற்புதம் படைத்தது நைமிசா ரணியம். (ககூ)

---

* பசும்பிடி - பச்சிலைமரம்.

அனந்த லைவிடுத் தருந்தவம் புரிமுனி வரரவ்
வனந்த லைத்தலை யளிமுரன் றிடப்பணி மலர்சேர்
நனந்த லையொருங் கெய்தினர் நயப்புறு தோற்றஞ்
சினந்த லையொழித் தனந்தமென் றுதித்தெனத் திகழும். (உ0)

வேறு.

போது கொண்ட பொழில்வளம் யாவையு
மூது ணர்ந்த முனிவரர் நோக்கியே
யீது நின்மகஞ் செய்தற் கிடமென
வோது நன்மொழி யோசை பரந்ததால். (உக)

எண்ணி லாமகிழ் வெய்திய மாதவர்
விண்ணில் வாழும் விசுவகன் மாவினைத்
தண்ணி தாமனந் தன்னி னினைந்தனர்
கண்ணி மைப்பொழு திற்கடி துற்றனன். (உஉ)

முனிவர் கண்டு முறுவலித் திவ்வனந்
தனிம கஞ்செய் திடத்தகு சாலைநீ
யினிது செய்யென வேவின ரன்னவன்
கனிவு கொண்டு கருத்தி னினைந்தனன். (உங)

வேறு.

உலப்பை வந்தடை யாமுன முயர்தவம் புரிய
நலப்பை வாளராத் தாங்குமம் புவிதனி லுடித்
தலப்பை யின்னதென் றறிவரு மகிமைமா தவர்க்குக்
கலப்பை சூழ்ந்தொளிர் சுபதலங் களிப்புறக் கண்டான். (உச)

---

* கலப்பை - உபகரணம்.

என்னு ரம்பதி னுயிர யோசனை யிலகி
நண்ணு நீளநா லாயிரம் யோசனை நலஞ்சேர்
திண்ணி தாயுயர் செழுமதி னாற்றிசை சூழ
வண்மை யானகை வளம்விளங் கிடவகுத் தமைத்தான் (உ௫)

ஏயு மூவிரண் டாயிரம் யோசனை யெழுச்சி
யாயுங் கோபுரத் தமைந்தணி பெறுமுரு விளங்க
வாயி னான்கினு நின்றிடு மரகதக் கதவிற்
பாயும் வச்சிரத் தாளலாற் பகரரி தாமால். (உ௬)

பகடு பூண்டிழா தொளிர்மணித் தூண்பல நிறுத்தித்
தகடு றம்பசும் பொன்னொளி தழும்புமண் டபமு
முகடு வேய்ந்திடும் விமானமு முழுநிலாத் தவழ்ந்து
துகடு லக்கிவீழ்த் திலகுமே டையுமகத் துளதால். (உ௭)

வேறு.

சிற்ப நூல்விதி யிற்சிறி தாயினு
முற்ப கர்ந்த முறைபிற ழாமனற்
பொற்பு யர்ந்து புனையுஞ் சினகரம்
பற்ப லப்பண் பமைந்து பரந்ததால். (உ௮)

குண்ட மேகலை தண்டில மன்றியே
யண்டர் வந்தவி யுண்ணு மிடமரும்
பண்டம் வைக்கும் பயிலிடம் பற்பல
கண்ட மைத்தகண் காட்சி மலியுமால். (உ௯)

விருக்க வுத்தமங் கண்டு விதித்திடுஞ்
சுருக்குந் தூய சுருவமுஞ் செந்தழ
லருக்க னன்றிக் கடையு மரணியு
மிருக்குந் தூய்மை யிடமு மமைத்தனன். (௩0)

கோப மாழக் குணமிகு மந்தணர்
தாப வான்கனல் வேள்விசெய் சாலையி
லூப தாரு வுயர்கல் லிடத்துட
னுப சுப்பந்த வத்தல மாக்கினான். (௩௧)

மணங்க மழ்ந்த மலர்புனை மாலையுங்
குணங்கொ ளும்பனி நீர்குளிர் சாந்தமு
மிணங்கு பைங்கருப் பூரமு மெய்திடங்
கணங்க[illegible] கண்டு களிப்ப வமைத்ததால். (௩௨)

அன்ன சாலையு மந்தணர் சூழ்ந்திடும்
பன்ன சாலையும் பாகிலைச் சாலையுஞ்
சொன்ன சாலையுந் தூய்மணிச் சாலையு
மின்ன சாலையென் றெண்ணரி தாகுமே. (௩௩)

வேறு.

வழிமதுத் துளிக்குந் தூய மடலவிழ் மலர்மி டைந்த
பொழிலகத் தமைந்த சாலை பொற்புற மூதிரை யேனை
லெழின்மிகும் யவைநீர் வார மெட்கணிக் குவியன் மற்று
மொழிவது முழுதும் வைக்கு முறைதெரிந் தமைத்தான் மாதோ, ()

மருப்பயில் பதும மேவு மறையவன் வகுத்த வேத
விருப்புறு பலன்க ணல்கும் வேள்விசெய் சாலைச் சூழற்
றருப்பையும் பொரியுந் தேமாந் தழையொடு சமித்து நெய்யு
மிருப்பதற் கியனூல் சொல்லு மிடம்பிற ழாத மைத்தான். (௩௫)

உந்தியங் கமலப் போதி னுதித்தகான் முகன்பூ மேவுஞ்
செந்திரு மார்பன் மேலாஞ் செம்பொன்வா னுலக ளிக்கு
மிந்திரன் முதலா யுள்ள விமையவர் யாக சாலை
வந்தினி திருக்கும் பீட மிவைப்பதும் வகுத்தல் செய்தான். (௩௬)

இனையன பலவுஞ் சூழ வியல்புளி வழாது மேன்மை
தனையறி வரிய யாக சாலைக்கண் கமைத்துத் தாழா
தனையமா தவர்ம லர்ப்பொன் னடியிணை யிறைஞ்சி னன்கற்
பனையதோ படைப்பெ ழுச்சிப் பான்மையோ வெனம கிழ்ந்தார். ()

விண்டுதே ழெழுக வோங்கி விண்முக டளாந்து லாவும்
வண்டுளர் மலர்ப்பூங் கானின் வளங்கெழும் யாக சாலை
கண்டுள மகிழ்ந்த தூய கடவுண்மா தவர்கள் சூழ்ந்து
பண்டுசெய் விரதம் வந்து பலித்தெனுஞ் சாலை சார்ந்தார். (௧௮)

சகத்திருண் மயக்கந் தீர்ந்த சவுனகன் சனகன் கற்க
னகத்தியன் வியாக்ர பாத னத்திரி விசுவா மித்திர
னுகத்தினை யனேகங் கண்ட வுரோமமா முனிவன் குச்சன்
சுகத்திரு முனிதூர் வாசன் குணிபரத் துவாச னென்போன். (௧௯)

காசிபன் வசிட்டன் சாந்தன் கார்த்தியா யனன்ம ரீசி
யாசிகர்த் தாபு லத்திய னணிமாண் டவியன் ருற்பிய
ருசிகே தாத்தி ரேய னாரதன் பருவ தாக்னி
தேசில கியத தீசி சிலாதரன் வாம தேவன். (௨0)

கிருதிலி கிதன்ம தங்கன் கௌர்சுனச் சேபன் மேன்மை
தருசனந் தனன்சி றந்த சனுதிபன் றருசாண் டில்யன்
பிருகிரை வதன்பி றங்கு மாதேசன் பிருகு சீர்த்தி
வருமிரு கண்டாங் கீரன் வைச்சிர வணன்சம் வர்த்தன். (௨௧)

பகைத்தெழு புலத்தை வென்ற பார்க்கவ முனிவன் பாரின்
மிகப்பெரு மயக்க முற்றும் வெறுத்திடுங் கபிலன் வேத
வகைத்திற னங்கம் யாவும் வகுத்தறி நாத சன்மா
திகைப்பறு காது வாய்மை திகழ்சம தக்னி மேலோன். (௨௨)

புராதன மறைக்கு மெட்டாப் புனிதன்பொற் புறும ணிச்சூட்
டராவணி பரன்ம லர்த்தா ளகதநசனு தினமு நீங்காப்
பராசரன் றகுமாரக் கண்டப் பண்ணவன் கண்ணு வன்சீர்த்
தராதலந் தனின்மே லாமுத் தாலக முனிவன் சாத்தியன். (சங)

கேழ்கிளர் குசிக கோத்திரன் கெழுமுபல் கலைநற் கேள்வி
சூழ்சுனப் புச்சன் ஞான சூரிய னெனர்ந் துதித்தே
யேழ்புவி யிறைஞ்சும் வேதா ரணியன்மற் றேனை யோரும்
வாழ்பெருந் தவப்பே ருன மகம்புரி வதற்கெ ழுந்தார். (சச)

வேறு.

ஆய்ந்த நான்மறை யந்தண ரரியநல் வேள்விக்
கேய்ந்த யாவையு முபகர ணமுமினி தமைத்தே
வாய்ந்த நெய்சொரிந் தாகுதி விதிமுறை வழாது
காய்ந்த னற்சொலித் தெழுந்திடக் கனிந்துசெய் தனரால். (சரு)

போதி ஞன்முகன் பூவைமே னியன்மதிப் புனித
ஞதியாகிய கடவுளர்க் கருமறை பகர்ந்த
நீதி யாய்ந்தவி யருத்தினர் நெறிபிற ழாதே
யோதி வாய்ந்துநல் லொழுக்கமுற் றியவுயர் தவத்தோர். (சசு)

திரம்பி நற்குண நெறிவழி யொழுகிநன் னிலைமை
வரம்பி கந்திடா மாதவர் மகம்புரி சூழ
னரம்பி சைந்திடும் யாழொலி நான்மறை யொலியேழ்
சுரம்பி றங்கிசைப் பாடலி னொலிதொனித் திடுமே. (சஎ)

மேக மண்டலம் போழ்ந்துமே லெழுந்துமே வரிய
மாக மீதுலா வியசெழு மலர்திகழ் வனஞ்சூழ்
யாக சாலையி லிரவுநன் பகலுமெண் ணரிய
காக ளம்மணிச் சின்னநல் லிசைகலித் திடுமே. (சஅ)

கொழுந்து விட்டனல் சொலித்தது விண்மிசைக குழுறி
யெழுந்து துந்துபி முழங்கின விடிக்குரன் முழவ
மழுந்து மோசைவிட் டார்த்தன வதிாநதன வெங்கும்
பொழிந்து பூமழை நிறைந்திடும் யாகபூ மியினில். (௪௯)

பாகு தித்திடு மின்னிசைப் பாட்டளி முரலுங்
காகு ளிர்ச்சிகொ டளிர்மலர் கமலமே லெழுந்த
வாகு திப்புகை நறுமண மசலிரு விசும்பி
னேகு மைப்புயல் சொரிமழை யிறுங்கமழ்ந் திடுமே, (௫0)

கொடிசி றந்திடுங் கிழங்குகாய் கனிகுளிர் தருவா
வடிசி றந்தநெய் தோய்ந்தசிற் றுண்டிவாய்ந் திடுபா
லடிசி லின்சுவைக் கருனைவெண் சாலிநல் லன்ன
முடிசி றுங்கநீள் கடவுளான் முறைதெரிந் தளிக்கும். (௫௧)

பொய்வ திந்திடு புறச்சம யத்தினை யொழிகதுச்
சைவ சாத்திரந் தத்துவ நெறிபகுத் துணர்ந்த
தெய்வ நீறணி யநதணர் தேன்மலமு கமழ்ந்து
செய்வ னந்தனிற பிறவும்வே ண்டுவபல வுளவால். (௫௨)

ஒருப லத்தையும் விரும்பிடா வும்பர்கோ னருளால்
வருப லப்பய னிதுவென மகம்புரி முனிவ
ரிருப திற்றிரு முயிரஞ் சிடர்பாங் கிருப்பத்
தருப ணைத்தெழு வனந்தனிற் றகும்படி செய்தார். (௫௩)

அனைய வற்புத யாகமீ ராறெனும் வருடந்
தனில ருந்தவர் நிறைவுறச் செய்துதன் டளிர்மென்
னனைய ரும்பிடு கற்பக நாட்டிறை வேந்த
னெனைய தேவரு மவிருகர்ந் திடவினி தளித்தார். (௫௪)

நலன்செ ழித்திடு நைமிசா ரணியமென் றுரைக்கு
நிலன்செய் புண்ணியப் பேறெனு நெடிதுபற் பலநாள்
வலன்சு ழன்றெழு பாவகற் கெழின்மறை மனுவாற்
புலன்செ யித்தவர் பூரணா குதிபுரிந் தனரால் (௫௫)

எழுது தற்கரி தாமறை யியம்பிடும் விதிகண்
முழுது ணர்ந்தவர் முறைசெய்து வேள்விமுற் றியபின்
பழுது றுதுநீ ராடிபவ் வேள்விசூழ் பரப்பிற்
றொழுது சந்தியிற் கடன்கழித் தினிதுசூழ்ந் தனரால். (௫௬)

இவவி னின்றிடு நரம்பிசை யெனத்திகழ்ந் தொளிரு
மவண யந்தெழு நாதமஞ் சுழுமுனை யடுத்து
மவுன யோகநன் மாதவம் புரிதரு மகிமைச்
சவுன காதிமா முனிவரர் மகிழ்ச்சிசாற் றரிதால் (௫௭)

பன்று நான்முறை பகர்ந்திடு பலதவ மியற்றி
மன்னும் வேதியர் மரபினுக் கோதிய யாக
முன்னும் வாய்மையா யுஞற்றின மொளிர்மதி யணிந்த
மின்னும் வேணியன் வீடுறை வழிவினை வறியேம். (௫அ)

ஏது வாமிவை செய்தயா மினியது கிடைக்க
வோது முண்மையா முபாயமு முணர்கில மெனவே
கோது நீங்கிய குணத்தினர் குறித்திருந் தனரப்
போது சூதமா முனிவரன் போந்தனன் மாதோ. (௫௯)

வேறு.

பண்டிசைவு கொண்டபுரி நூலொளி பரம்பப்
புண்டர மிருந்தனுதல் பொற்புற வனேகங்
கண்டிகை புனைந்துசடை கட்டவிழ விண்ணின்
றெண்டிசை விளங்குகதி ரோனென வெழுந்தே. (௬0)

வண்டொடு மிடைந்துமலர் விண்டுமணம் வீசும்
விண்டொடு வனந்தனில் விரைந்துகர மீது
தண்டொடு கமண்டலம் விளங்குமுனி சாரக்
கண்டொடு மகிழ்ச்சிகரை கண்டிலர்க ளம்மா, (௬௧)

வேறு.

புனித மாதவர் சூதமா முனிவரன் போத
வினித லர்ந்த செந்தாமரைக் காங்குவித் தெழுந்தே
கனித ரும்பல முகமனின் னுரைத்தகங் கரைந்து
பனித யங்குசெம் பொன்னொளிப் பதுமபீ டிகைமேல். (௬௨)

வைத்த ருக்கியங் கொடுத்துநின் வரவுநன் மலரோ
னுய்த்த னுக்கிர கம்புரி யொளிமிகு வனத்தின்
மெய்த்த ருந்தவம் வேள்விசெய் பேறென வியந்து
பொய்த்த விவ்வுடற் புனிதமா கியதெனப் புகன்றார். (௬௩)

துய்ய மாதவர் சூதமா முனிவனைத் தொழுதே
யைய கேள்பதி னெண்புரா ணமுமரு மறையும்
வைய மீதுள கலைகளும் வகுத்துணர்ந் தனையா
முய்ய நின்றிரு வருளலாற் பிறிதுவே றுளதோ. (௬௪)

என்றெ டுத்தெடுத் துரைத்திரு கண்கணீ ரிறைப்ப
நின்றெ மக்குமற் றேனைய வுயிர்க்குநீங் கரிதா
யன்றெ னைத்தையு மறைக்குமும் மலவிரு ளகலத்
துன்றெ யின்னகைத் தவனருள் வீடுசேர் சூழ்ச்சி. (௬௫)

யாது செய்திடிற் பெறுகுவ மெனவுரைத் திரைய
வோது மாதவர் வாய்மைகண் டுருகியோர் முகூர்த்த
மோது ணர்ந்தவ னுணர்ந்தக் கடலின்மூழ் கினன்பின்
சாது நீவிர்கேட் பனசொலத் தகுமென வியந்தான். (௬௬)

உலகு போற்றிடு நைமிசா ரணியமென் றுரைக்கு
மிலகு முத்தம சருக்கமீண் டுரைத்தன னிப்பா
லலகு கண்டெடுத் துரைப்பரு மனேகமா மகிமைப்
பலன்வி ளங்கிடுந் தலச்சருக் கம்பக ருவனே. (௬௭)

நைமிசாரணியச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசஅ.

---

# தலச்சருக்கம்.

கஞ்சநாண் மலர்மே லுறையயன் முதலோர் கற்பகா லம்பல தேடி, நெஞ்சினைத் தின்னங் காணரும் பொருளை விழைந்தனிர் நிகழ்த்துவ னென்றே, யெஞ்சலில் வளஞ்சூழ் நைமிசா ரணியத் தினிலுறை யருந்தவ ரிலகு, மஞ்செவிக் கமுத மாமெனச் சூத முனிவரனன்புகூர்ந் துரைத்தான். (க)

வேறு.

விடைப்ப ரம்பொருள் மெய்யருள் விளங்கிவெவ் வினையைத்
துடைப்ப மும்மல வலிதொலைந் தவர்தொகு மிடமாங்
கிடைப்ப தற்கரு முத்தியைப் பெறும்வழி கேள்வி
நடைப்ப யின்றநன் முனிவிர்கா ணயம்பெறக் கேண்மின். (௨)

உவமை சொல்லரு மியோகநன் கியற்றினு முண்மைத்
தவமு திர்ச்சிகொள் சாந்திரா யணமுதல் விரதம்
பவமொ ழிந்திடப் புரியினும் பலித்திடும் பரம
சிவன ருந்தல வாசஞ்செய் யினுமுத்தி சேர்வார். (௩)

என்று சூதமா முனிவர னுரைத்தன னிலங்கு
துன்று ரோமநற் புளகித முற்றிடத் துதித்தே
நன்று கூறினை யையநீ நால்வகைத் தோற்றஞ்
சென்று தித்திடுஞ் சராசர மியோகுசெய் திடுமோ. (௪)

உண்மை சூழ்தவம் விரதநன் றருற்றுவ தெளிந்தோ
வெண்மை காணரு முயிர்த்தொகு திகட்கெலா மியலும்
வண்மை யேதல வாசமற் றதன்பெரு மகிமை
யண்மை சேய்மையிவ் வனைத்தநீ யருள்செயென் றுரைத்தார். (௫)

வேறு.

எடுத்த ருந்தவ ரருள்செயென் றுரைத்தலு மிணையிரு விழியென்னு
மடுத்த தும்பிவீ ழானந்தப் பெருக்கொடு மயிர்ப்புள கிதஞ்செய்யத்
தொடுத்தகங்குழைந் துருகிடப் பற்பல தொகுத் துரைத்தனனம்மா
கடுத்த தும்பிய கண்டன்மெய் யருள்பெறு கருணைமா தவர்கேட்ப.

வேறு.

அன்ன தன்றியொன் றுரைத்தன ரையகேண் மகிமை
யின்ன தென்றறி வதற்கரும் வியாசன்றன் னிடத்திற்
பன்ன ரும்பதி னெண்புரா ணமும்பகுத் தறிந்து
முன்னர் மற்றுள கலைகள்யா வனுமுழு துணர்ந்தாய். (எ)

திருந்தி டுஞ்சிவ தலவிசே டங்களுந் தீர்த்தம்
பொருந்து நீடுமான் மியமுமேற் புகழ்சிவ தீக்கை
வரும்ப டிக்கிடைத் திடுஞ்சைவா சாரமு மற்று
மருந்தி றற்பெற விரித்துணர்ந் தனைபெரி தாமால். (அ)

நேர்மை யானநன் னெறிதனி னேர்மையாய் நிலவுஞ்
சீர்மை யாகிய சைவமான் மியமயந் தெரிந்து
கூர்மை யாமறி வுடையையிக் கலிதனிற் குலவி
யார்மை சேர்மிடற் றண்ணல்சீர்த் தனஞ்செய லரிது. (௯)

ஆழி சூழ்புவி யினிற்சிவ பத்திதா னரிது
வீழி வாயுமை பாகன்மெய்த் தலம்பெற லரிதுள்
ளூழி யற்கையாய்க் கிடைப்பினு மூண்மையாய் முத்தி
வாழி மானுடர்க் குதவுபுண் ணியத்தல மரிது. (௧௦)

எனவு மையநீ யோதினை யிளம்பிறை கங்கை
மனவு சேர்தரும் வள்ளல்பா தாம்புய மலரை
நனவு வாய்ந்திடு பொழுதினு மன்றிநண் ணிடுநீள்
கனவு காண்பினு மருதுநற் கருத்தமைந் தனையே. (௧௧)

மூந்த ருந்தவ மெம்மனோர்க் குதவிசெய் முறைபோற்
பந்த நீத்திடும் பரமபுண் ணியவுரு வெடுத்து
வந்த செல்வநல் வயித்திய நாதமென் றெழில்சே
ரிந்த மாநிலத் தொருதல முளதென விசைத்து. (௧௨)

கயிலை யாதியா மகிமைசேர் கண்ணுதற் பெருமான்
பயிலும் புண்ணியத் தலம்புவி யினிற்பல வுளவால்
வெயில்வி ரித்தெழு மாடமா ளிகைமிக விளங்கிச்
சயில நேர்பெறு மனையநற் றலத்தினுத் தமமாம். (௧௩)

எண்ணி டுங்கணப் பொழுததிற் பாதியா யினுமப்
புண்ணி யத்தலம் புகுவதற் கிச்சைசெய் தனர்க
ணண்ணி வாழ்வர்நற் கதியலா துருத்திர ருவா
ருண்ணி னைந்தன பெறுகுவ ரெனவுரைத் தனையால். (௧௪)

அனைய வற்புதத் தலப்பெரு மகிமையை யடியே
மினைய வென்னபுண் ணியப்பல னறிகிலே நினது
புனைய ருட்கிட னுயாம் பெறும்வகை புகழ்ந்த
னைய ருந்தவ வுரைத்தரு ளெனப்புகன் றனரால். (௧௫

தா மழுமா, னுறைபரன் சரிதங் கேட்பது செவிதா முறுமதே யுடல தா மினிய, நறைகமழ் மலர்க ளருச்சனை செய்து நறுமண மறிந்த நாசிய தாம். (௨௧)

எடுத்திவ ணுரைத்த வைபவம் படைத்தே யிருந்திடு மருந்தவத் தினர்சேர்த், தடுத்திவை பகர்தற் கரிதுபூ மியினி லனையதற் றலத்தி னைக் காணேன், கொடுத்திடு முத்திக் கப்புற மென்று கூறுவர் குண கடன் மேல்பார், நெடுத்தயோ சனைதூ ரத்தினிற் சுவேத வனமயி டை சூழ்ந்திட மாதோ. (௨௨)

திகழ்தரு சாயா வனத்தினுக் கனலன் றிசையினிற் சிரபுர மெ ன்று, புகழ்பெறு நகர்க்கு நிருதியின் றிசையிற் பொருந்திடு குரோச மாத் திரத்தி, னிகழ்துயர் நீக்கும் வாளொளி புள்ளூர்க் காருதற் றிசை யதின் கீழ்பா, னிகழ்தருந் தெற்கும் வடக்கினு முபய காவிரி நிறை ந்திட மன்னும். (௨௩)

வேகமாம் பொன்னி மாநதி யிருபால் விளங்கிடு மெல்லையி னள வை, யேகயோ சனைமாத் திரமித முறப்ப னிலகிடு மிந்திர தலத் திற், காதமோர் குரோசம் வாயுவின் றிசையா மந்நகர் மன்றுளத் தெல்லைச், சேகரங் கூறிற் கிருதமா யுகத்திற் றிகழ்ந்திடு நான்குயோ சனையே. (௨௪)

உரைபெறுந் திரேதா யுகந்தனி லொருமூன் றியோசனை துவா பர யுகத்தின், விரையுமி யோசனை யோரிரண் டினிக் கலிதான் வரு திடு முகந்தனி லம்மா, புரைதவிர்ந் திலகு மியோசனை தூரம் பெ ருந்தாற் பொற்புறு மினிய, தரைபுகழ் வயித்திய நாதமா நகர தன்பெரு மகிமைகூ றரிதே. (௨௫)

விதிக்கலாம் வயித்திய நாத, வண்ணல்சூழ் தலத்தைக் கண்டபேர் பெறும்பே றளவிட லரிதரி தாமால். (௩0)

மண்ணினின் விளங்கும் வயித்திய நாத மகாதலஞ் சென்னமத் திமிற்றங், கண்ணினு லொருக்காற் பார்த்தவ ரிட்ட காமியம் பெறு வர்வெண் கயிலை, நண்ணியே புபய குலமிரு கோடி சூழ்ந்திட நடு வினி திருப்பா, ரெண்ணியோர் கற்ப காலமே லைய னினிதருள் முத் திபெற் றிடுவார். (௩௧)

வரமகத் துவஞ்சேர் வயித்திய நாத மாநகர் பெயர்சொலக் கே ட்போர், பிரமகத் தியுந்தாம் பிறந்தநா ளன் முதலாய்ப் பிழைபடச் செ ட்தபா தகமு, முரமற வுதறி யெறிந்தநதம் முடலி லுற்றநோய் முழு வதுந் தீர்ந்து, பரமபுன் னியஞ்செய் யுந்தமர் பெறும்பே றனைத்து மே பலித்திடப் பெறுவார். (௩௨)

பெருந்தி ரைக் கடலி லுலப்பல புவியிற் பிறந்தவர் திவுக டம்மி, லிருந்திடு மவர்வந் திறைஞ்சுதற் கெளிதன் றுதலா லிருக்குவே ளூ ரிற், பொருந்தியே வயித்திய நாதநற் றலத்தின் பொற்புறு திசைத னைப் பார்த்தே, திருந்திடப் பணிவோர் தீவினை யொழித்தே திகழ் தரு கயிலைவீற் றிருப்பார். (௩௩)

நூறுயோ சனைதூ ரத்தனி லிருந்து நுவலருந் தலப்பெயர் நினைந்து, கூறிடுமவரும் வல்வினை நீங்கிக் குலவுபே ரின்பவீ டுறை வார், ரீறிலாப் பெருமை வயித்திய நாத வெழிற்றல வாசஞ்செய வேனென், றூறிடு மன்பா னிதஞ்சொல்வோர் தலத்தி லுறைவர்தா ம் பெறும்பலன் பெறுவார். (௩௪)

மடுப்பொலி கமல மலர்மணங் கமழும் வயித்திய நாதநற் றல பார்த், தெடுத்தடி வைத்துப் போகுவ மென்றே யெழுந்தன ரடி

கடி யம்மா, வடுத்திடு மசுவமேதயா கஞ்செய் யரும்பலன் பெறு குவ ரன்றிக், கடுத்தனை நுகர்ந்த கண்ணுதற் பெருமான் கயிலையங் கிரியுமே பெறுவார். (௰௫)

கனைத்தரு கந்த வனமிகும் வயித்திய நாதநற் றலந்தனை மனத்தி லினைத்தவக் கணத்தி னீடும்வெங் கலிதோ டந்தனை நீக்கியே முத்தி தனைத்தரு முலகி லதிகமா மகிமை தான்றரு மன்பருக் குதவி யினைத்தரும் பாரம் வதிந்திடு மிட்ட காமிய மியாவதுந் தருமே. ()

வருதின மைந்து மூன்றுதான் வாசஞ் செய்திட வேண்டுமா மகிமை தருமுயர் வயித்திய நாதநற் றலத்திற் றம்முளங் கனிவுகூர்ந் திளகி யொருதினம் வாசஞ் செய்தனர் பதினு யிரமுய ரசுவமே தஞ்செய் பெருமகப் பேறு பெறுகுவ ரன்றிப் பேரின்ப வீடுமே பெறுவார். ()

தருமரிக் கனைசெய் தனர்க்கதி விருத்தி தான்செயுந் தனம்விழைந் தோர்க்கு, வருதன விருத்தி கொடுத்திடும் போக வாஞ்சைசெய் பவர்க்குமப் படிபா, மொருபலன் விழையார் முத்தியை விழைந் தோர்க் குளமகிழ் தரவினி தளிக்கு, மிருநில மதனில் வயித்திய நாத வெற்றிற்றல மகிமைகூ றரிதே. (௰௮)

புதல்வரை விரும்பு மவர்க்குநற் புதல்வன் றனைத்தரும் புவி விரும் பினர்கட், கிதமிகு மகில புவனமுந் தருமே யெழில்பெறு கன்னியை விழைந்தோர்க், குதவுமங் களகன் னியையது வன்றி யுற் றவர் பிணிவினை தீர்த்துப், பதவிதல் கிடுமவ் வயித்திய நாத மகாதலம் பார்தனி லம்மா. (௰௯)

சாற்றுபொய்ம் மாயக் கடலினி லழுந்திக் கிடந்திடு முயிர்க ளைக் கரைதா, னேற்றுநற் பிணைதா ளுகிடும் பிறந்த தினிப்பிறக் கின்

றன பிறவி, தோற்றமெய் யுயிர்க்குஞ் சொலற்கரும் பரமா னந்த
நல்கிடுந் தொருத் தெழுத்திட், டேற்றுமந் திரங்கட் கிடமதாம் வயி
த்திய நாதமா மெழிற்றல மாதோ, (௪0)

எழுந்துகு முவிச்சை யிருட்டினூற் குருடா யிருந்திடு மனுக்க
ளுக் கெழுந்த, கொழுந்தவிட் டிலகு தீபமாம் வயித்திய நாதநற்
றலந்தவ லயத்தி, னழுந்தும்வல் வினைக்கு மண்ணினை மருந்தா யளி
த்திடும் பிறவிவே ரறுக்கு, மொழிந்துமேற் சதியுந் தருமிதற் கிணை
வே றெப்பிட லரிதரி தாமால். (௪௧)

இருக்கநன் றிலகும் வசுக்களோ ரெண்மர் திகழுருத் திரர்பதி
னொருவ, ரருக்கர்பன் னிருவர் புரந்தர னயன்மா லாதியாங் கட
வுள ரன்றி, யிருக்குரைப் பரிய முத்திபெற் றிடவே யெண்ணிலர்க்
கருளுநல் லெழிற்செம், புருக்கனற் கோபக் கட்பசா சனைத்துமோ
ட்டிடும் வயித்திய நாதம். (௪௨)

யருசன னடந்த போதெழு செந்தூள் படினும்வாழ் சுரபிகா
லடியிற், பெருந்தூள் படினுஞ் சுழன்றிடு காற்றிற் பிறந்ததூள்
வீழினும் பெருங்காற், றிருநில மதிர வடித்தனூள் படினு மிலகும்வே
ளூர்நெடு வீதித், தெருவிலங் கப்பிர தக்கிணஞ் செய்வோர் சிறுதூ
கள் படினுநற் கதியாம். (௪௩)

மட்டிலா மகிமை வயித்திய நாத மகாதல வீதியி லெழுந்தூள்,
பட்டபே ரரச ராயுல காள்வார் பகர்தரு முருத்திர ராவா, ரிட்ட
மாம் வரங்கேட் பவர்க்கிரு மடங்கா மிலகுபுண் ணியஞ்செய்வோர்க்
கிரட்டி, கட்டம்வா ராம லளித்திடும் வளர்மெய்ஞ் ஞானமும் வீடு
நல் கிடுமே. (௪௪)

உலகெலாந் துதிக்கும் வயித்திய நாத னுறைதல வாசமுற் றிருக்
க்கு, மலகுகா ணரிய கலையுணர் மறையோர்க் கமைத்திடு சந்திவந்
தனஞ்செய், யிலகுசோ பான மியல்பெறுங் கிரகங் கருங்கன்மா
ளிகையினை கொடுப்போர், பலருண மணிசூழ் முடிபுனை வேந்த
ராகிமேற் பரகதி பெறுவார். (௬௫)

ஒத்திடு மகிமை வயித்திய நாத னுறைதலந் தனில்வள ரன்ன,
சத்திர மடம்வீ டிடமிகு மாட மாளிகை தழைந்தெழில் கொழிக்குஞ்,
சித்திர கூடங் கட்டிவைத் திலகு சிவனடி யார்க்களித் திடுவோர்,
புத்திர ருடனே சகலபோ கங்கள் புசிப்பர்மேன் முத்தியும் பெறு
வார். (௬௬)

அல்லணி களத்தெம் மையனல் வயித்திய நாதன்வாழ் தலந்தனி
லன்பர்ச், சில்லிடங் கட்டி வைத்தவர் குலமூ வேழுட னின்பமுற்
றிருப்பார், செல்லுமுந் திரந்தூங் போதிகை மரங்கல் சிவனடி யார்
தமக் களிப்போர், சொல்லரு மணிபொன் னுடையா பரணஞ் சூழ்
வர்பே ரின்பமும் பெறுவார். (௬௭)

வளம்பெறும் வயித்திய நாதன்வாழ் தலத்தின் வழிநடைச் சா
லையின் மீது, தளர்ந்தவ ரிளைப்பா றுதற்கமை தண்ணீர்ப் பந்தல்சத்
திரங்கண்மண் டபந்தன், னுளங்களித் துறுதி பெறச்செயு நல்லோ
ருயர்குல மிருபதிற் றொன்றும், விளங்கிடும் விமான மேறியே சிவ
லோ கந்தனின் மேவியே யிருக்கும். (௬௮)

மாடமா ளிகைசூழ் வயித்திய நாத மகாதலந் தனில்வள மிலகு
பாடக சாலை செய்துபோற் றினர்கள் பாருல காள்வர்கோ சாலை
யாடக மதில்சூ ழங்கே ரதனிற் செய்துவைத் தவர்கள்கோ வுலகந்
தேடரும்பசும்பொன் னுலகினில்வாழ்வர் சேர்குவர்மேற்சிவலோகம்.

அற்புத வயித்திய நாதநற் றலத்தி லணிமணி மமைந்தசெங் கழு நீர், பொற்புறு நளின வாவியைப் புரிந்து வைத்தவ ரரசராய்ப் பிற ந்து, கற்புறு மனையா ளுடன்கலந் திருந்து கல்விசேர் புதல்வரைப் பெற்று, நற்புவி செங்கோல் செலுத்தியே யாள்வர் நண்ணுவர் மேற் சிவ லோகம். (ரு0)

திகழ்தரும் வயித்திய நாதநற் றலநாற் றிசைதொறும் பரிதிபங் கடவு, ணிகழ்வெயிற் கினிய குளிர்நிழ லளித்து நின்றிடுந் தருமிக வைப்போர், புகழ்பெறும் வேந்த ராயுல காள்வார் பொன்னுல கமும் புரந் திடுவா, ரிகழ்விலா விமான மேறியே மகிழ்கூர்ந் தெய்துவர் மேற்சிவ லோகம். (ருக)

படங்குனித் தாடு மரவணி வயித்திய நாதநற் றலந்தனிற் பரிந்து, தடம்புனற் றிரந் தனிற்றரு வைப்போர் சகலபாக் கியம்பெறு குவர்நன், மடந்தைதன் னுடனே யில்லறம் புரிந்து வானுல காள்வர் மேற் பதவி, யடங்கலும் பெறுவ ரவைவெறுத் திடிற்சொல் லரிய பே ரின்பவீ டுறைவார். (ருஉ)

மழுவணி வயித்திய நாதனற் றலத்தின் மன்னுபூந் தோட்டம் வைத் திடுவோர், செழுமல ரொன்றிற் கிலகுமைம் பதினு யிரம்வரு டஞ்சிவ லோகந், தொழுதிடுங் கணங்கள் சூழ்ந்திட விருப்பார் தூய பத் திரங்களொன் றினுக்குப், பழுதறுப் பதினா யிரம்வரு டம்பொற் பமைசிவ லோகம்வீற் றிருப்பார். (ருங)

புண்ணிய வயித்திய நாதநற் றலத்திற் புகழ்பெறு வாகன மதனைப், பண்ணிவைத் தவரவ் வாகனம் பார்த்து மகிழ்ந்தவர் பரிந் துபகார, நண்ணிடும் படிசெய் தவர்கள்வாக் குதவி நல்லனு கூலசா

தகஞ்செய், திண்ணிய வுறுதி யுள்ளவர் வாழ்ந்து சேர்குவர் மேற்சிவ லோகம். (ருச)

புவனியிற் புகழ்சேர் வயித்திய நாத புண்ணியத் தலந்தனி லம்மா, சிவகயிங் கரிய விசாரணை செய்தோர் சித்தியும் போகமும் பெறுவார், றுவரித முரம்பை கவரிகா லசைப்பச் சொல்லரும் விமானமே லேறித், தவமிகு தேவ கணம்புடை சூழச் சார்குவர் மேற்சிவ லோகம். (ருரு)

திருத்தகும் வயித்திய நாதநற் றலத்திற் றிருப்பணி செய்திடினம்மா, பருத்தமன் னதனிற் றுகளாந் தாரு பகர்ந்திடுஞ் சதகுணஞ் செங்கல், பொருந்துமாங் கருங்கல் லாயிர மடங்காம் புண்ணியம் புவிமுழு தாள்வ, ருருந்தரு தேவ விமானமே லேறி யுறைகுவர் மேற்சிவ லோகம். (ருக)

சங்கரன் வயித்திய நாதநற் றலத்திற் றன்மனங் களிவுகூர்ந்தமைந்த, செங்கலோ ரெட்டாற் றிருப்பணி செய்வே னெனத்திசை யெட்டினும் வைத்தே, யங்கதற் குபயோ கந்தனை நினையு மவர்சுமை யெடுப்பவ ரெனினுந், துங்கவென் குடைசூ முரசராப் பிறந்து சூழ்திருப் பணிசெய்து மகிழ்வார். (ருஎ)

நிதியம்வைத் திருப்போர் நிலைபெறு சிவபுண் ணியநிமித் தம்மன மகிழ்ந்தே, மதியணி பெருமான் பணிசெய வேண்டும் வயித்திய நாதநற் றலத்தி, லதிகபுண் ணியமாஞ் சிவாலயப் பணிசெய் யாதவ ரருங்கொடு நரகம், பதியவோர் பதினொ யிரம்வரு டம்வீழ்ந் தனுபவிப் பார்பல துன்பம். (ருஅ)

படிபுகழ் வயித்திய நாதநற் றலத்திற் பகர்திருப் பணிசெய்யாதிருக்குங், கடினசிந் தையர்போய்ப் பசாசதாய்ப் பிறந்து கணக்கில்

பன் ஞானலிங் கிடுவார், மீடியராய்ப் போகா திருந்திட வேண்டு மெனத்திரு வியம்புரைத் திடுமக், கொடியர்கள் பிரம கற்பகா லங் கள் கோரமா நரகில்வீழ்ந் திடுவார். (ருக)

விஞ்சைய ரேத்தும் வயித்திய நாத வியன்றல மகிமையை விளம்பின், செஞ்சொலு சிவகா ரியத்திறுக் களிப்ப நிறைந்திடு திர விய மதனை, வஞ்சனை செய்வோர் மகாநர கத்தி லழுந்துவர் வள்ள லுக் கென்று, செஞ்சொலா லளித்த திரவியம் பாது காத்துவர் சேர் வர்நற் பதவி. (கூ0)

ஒழிவிலான் குரு பீசனுக் கென்றே யிரந்துசெய் தவர்தமக் கம் மா, வாழிசு மூலமி லளித்தவர்க் காறு மடங்குபுண் ணியமது சே ரும், யிழிவா யுமைபங் காளர்கா ரியத்தின் மேன்மைய ரேவலா லெ ழுந்து, தாழ்விலாச் சிவகா ரியந்தனைச் செய்வோர் தமக்கியாண்டு புன் பமேற் பெறுவார். (கூக)

தோன்றிய புகழ்சேர் பொருளுடைத் தோர்க ளொகைபெற திரவியம் பகுத்து, மூன்றிலொன் றளிப்ப துத்தம மாறி லொன்றனை மொழிவர்மத் திமமா, வென்றிசே ரெட்டி லொன்றினை யதன்ம மெ ன்பர்பத் ததன்மமே லதன்மம், போன்றிடும் பாதி யதிகவுத் தமமாப் புண்ணியம் பெறுகுவர் மாதோ. (கூஉ

வடித்தசெந் தமிழ்சூழ் வயித்திய நாத மகாதலந் தனினிறை தீர்த்தப், படித்துறை மைய மண்டபங் கொடுங்கை பதிந்திடு சுற்று மண் டபநீ, ளடிப்படை பல்மா மதில்சிவா லயஞ்செய் தனர்புவ யாள்வரிந் திரன்மான், முடித்தல மிருகை குவித்திட விமான மேற மேன் முத்திவீ டுறைவார். (கூங

